பாக்கியமாய்அரைவீசைப் பாகுசேரு
படிப்பவர்க்குக்கடைமருந்தின் பான்மைகேளு
ஆக்கியதோர்சோம்பு நற்சீரகந்தான்
அதிமதுரந்தக்கோலங் கொத்துமல்லி. (கசுச)

மல்லியென்றஇடுபிடனும் பேராத்தை
மஹாதிரிசாதமுடன் * அங்கோலந்தான்
வில்லியென்றசடாமாஞ்சில் நன்னாரிதன்வேர்
வெட்டிவேர்கூகைநீறு () குறுவேர்த்தோனும்
மூலையென்றபேரீந்து திவதிராக்ஷம்
மூக்கியமுடனெற்பொரியும் சந்தனந்தூள்
நூலையென்றபரித்தி ,, மூத்தப் + சிந்தில்சத்து
காவிசமும்கல்நார்கல் மதமுஞ்சேரே. (கசுரு)

* அங்கோலம்-அழிஞ்சில்.
() குருவேர்-சாயவேர்.
,, மூத்தம்-கோரைக்கிழங்கு.
\+ சிந்தில்-சிந்திசர்க்கரை,

சேர்க்கவே = கர்ப்பூரம் () சத்துப் ,, பூரம்
செண்பகப்பூசெங்கீரை + வச்சிரவல்லி
தார்க்கவேசங்குபற்பம் பவளஞ்சேரு
தான்வகைக்குப்பலம்அரைதான் அளதாக்கி
ஊர்க்கமுடன்சாற்கெய்யும் ஒன்றாய்ச்சேர்த்து
உத்தமனேசீர்வற்றக் காய்ச்சும்போது
ஏர்க்கவேசூரணத்தை எடுத்துக்கொட்டி
ஏகமாயக்கிளறியிட்டு இறக்கிடாயே. (கசுசு)

= கர்ப்பூரம்-பச்சைக்கர்ப்பூரம்.
() சத்து-சிலாசத்து.
,, பூரம்-ரசகர்ப்பூரம்.
\+ வச்சிரவல்லி-பிரண்டை.

இறக்கியேகலேசன்முதல் வயிரவர்க்கும்
ஏகாந்தவாலைமனோ மணித்தாயார்க்கும்

துறக்கியேபூசித்து தியானஞ்செய்து
தொழுதுஇருகரங்கூப்பி யடிபணிந்து
தறக்கியமாய்திரும்நோய் விரும்பிக்கேளு
தாபசுரம்மாறல்சுரம் சந்நிவாதம்
வெறக்கப்போம்பித்தசுரம் வயிற்றெரிச்சல்
வெண்பாண்டுவிழிகாசம் க்ஷயங்கள்போமே. (௧௬௭)

சயங்கள்போம்காமாலை நீரிழிவுமேகம்
சயனத்தில்புண்புரைகள் நயனகாசம்
சயங்கள்போம்அதிசாரம் சோகைபாண்டு
தாபசுரம்அதிகசுரம் அதிகவாந்தி
சயங்கள்போமண்டையிடி அண்டகாசம்
சண்டாளபிநசமும் சாந்தமாகும்
சயங்கள்போம்சடத்திலுள்ள நோய்கள்திரும்
தண்மையுள்ளலேகியத்தின் சார்பிதாமே. (௧௬௮)

குஷ்டம்எனும்புருக்கி பாண்டுமேகம்-உடக-க்கும்

குங்குமப்பூலேகியம்.

சார்வானகுங்குமப்பூ வெள்ளரிக்காய்வித்து
சாதிக்காய்லவங்கப்பூ, லவங்கப்பட்டை
ஏர்வானஏலமுடன் லவங்கபத்திரி
இயலானநீர்முள்ளி விலப்பனம்வேர்
கோர்வான = குமரிவேர் நெருஞ்சில்()செப்பு
கொடிமாதளம்வித்து ,, வணங்கியானை
தீர்வானதிருத்+துழாய் நெலவிமுள்ளி
திப்பிலியும்அதிவிடையம் கடுக்காய்சுக்கே. (௧௬௯)

---

= குமரி-சோற்றுக்கற்றாழை.

() செப்பு-செப்புநெருஞ்சில்.

,, வணங்கியானை இதுசிலேமாறுதன்மொழி

,, ஆனைவணங்கி ஆனைநெருஞ்சில்.

+ துழாய்-துளசி.

சுக்கானகறுவிலியின் பழமுந்தான்றி
சுய = கூகை மிளகு () கோதும்பைச்சத்து
க்கானவாதுமைப் பருப்போலேம்
கஞ்சாவித்ததிமதுரம் ,, உழுந்துசத்து
சுக்கானதேற்று ரோகணியு + மாஞ்சில்
சுகமாகவகைக்குஒரு பலமேவாங்கி
சுக்கான ;; பன்னீர்ப்பூபலம் அஞ்சாகும்
சுக்குவற்றலாயுலர்த்தி சூரணித்தே. (௧௭௰)

= கூகை-கூகைநீறு.

() கோதும்பைச்சத்து-கோதும்பைமா அன்றியும் கோதும்பைநொய்ப்பாலுஞ்சேர்க்கலாம்.

,, உழுந்துசத்து-உழுந்துமா.

+ மாஞ்சில்-சடாமாஞ்சில்.

;; பன்னீர்ப்பூ-ரோசாப்பு.

சூரணத்தில் = அப்பிரேகசெந்தூரந்தான்
சுத்தமாமதுவுங்கால் பலமேயிட்டு
வாரணத்தின் () கோவின்நெய்ப் படிகாலாக
வசனித்தகற்கண்டுப் பலம்அஞ்சிட்டு
காரணத்தின்கற்கண்டும் நெய்யுங்கூட்டி
காய்ச்சியிலேபாகுவரில் சரக்கைக்கொட்டு
ஏரணத்தில்கிண்டிமெழு காகும்போது
என்னசொல்வேன் லேகியத்தைஇறக்கிடாயே. (௧௭௧)

= அப்பிரகசிந்தூரம்-கிருஷ்ணவண்ணஅப்பிரேகம்.

கஉ0-புடந்தீர்ந்துசத்தில்லாதிருக்கவேண்டும்.

() கோவின்நெய்-பசுவின்நெய்.

இலக்கியேகுப்பிக்குள் பதனம்பண்ணி
என்மகனேதேவிக்கும் வயிரவர்க்கும்
இறங்கியேசண்முகற்கும் பூசைபண்ணி
ஏகாந்தசேர்வையதாய் பணிந்துபோற்று

இறக்கியேஇருவேளை அந்திசந்தி
எடுத்துநீசுண்டைக்கா யளவுகொள்ளு
இறக்கியேபுளிபுகையும் பெண்ணுந்தள்ளு
இச்சாபத்தியமாக எடுத்துஉண்ணே. (௧௭௨)

உண்ணுபின்புதீரும்நோய் உரைக்கக்கேளு
உத்தமனேமேகநீர் வெட்டைப்பாய்ச்சல்
திண்ணபின்புநீரடைப்பு நீர்ச்சுருக்கு
திரிதோஷங்கல்லடைப்பு*கிருமிபாய்ச்சல்
அண்ணபின்புசதையடைப்பு நீர்க்கிரிச்சி
அமூர்தமெனுமதுமேகம் மூத்திரபாவை
வண்ணாத்தப்பிரமியமும்()பெருத்தமாடு
வாதகுஷ்டம்பித்தகுஷ்டம் கிரந்திபோமே (௧௭௩)

* கிருமி-புழு.

()பெருத்தபாடு-பெரும்பாடு

கிரந்தியுடன்சூலைபதி னெட்டுந்தீரு
சிறுசிறுப்புதலைசுழற்றல் வாய்நீருறல்
காந்திபோம்காலெரிவு கையெரிவுமந்தம்
கண்ணெரிச்சல்பித்தவெட்டை அரோசகங்கள்
கிரந்தியுடன்அஸ்திசுரம் எலும்புருக்கி
கேள்தொத்துமேகமுடன் ஆனைப்புண்கள்
கிரந்தியுடன்அரையாப்பு கொருக்குமேகம்
கேடுகெட்டநோயான தாதுநஷ்டம் (௧௭௪)

நஷ்டமாம்ஆண்பெண்கள் மலட்டுநோய்கள்
நாடாதுநாடாது வியாதியெல்லாம்
நஷ்டமில்லைஅழகுண்டாம் தேகம்பொன்னும்
நலமாகும்பத்தியந் தான் ஆவின்நெய்பால்
நஷ்டமிலலைசிறுகீரை பொன்னாங்காணி
நல்லவெள்ளாட்டிறைச்சி பனிப்பயறுதானும்
நஷ்டமில்லை=கதலிகனி இவதிராக்ஷம்
நலமானசம்புநாவல்மாதளங்காயாமே. (௧௭௫)

---

=கதலிகனி-வாழைப்பழம்.

மேகநாதிஎண்ணெய்.

ஆமேதான்மேகநாதம் எலிச்செவிக்=குரும்பையக்காணி
அவுரியும்வல்லாரை()மேனிச்சாறும்
தாமேதான்பொற்றலையும் ஆடாதோடை
தழைதுளசிகுட்டிவிளா தூதளஞ்சாற்
கோமேதான்கோழியவரை சரக்கொன்றைச்சாற்
கொடிதானதகரைகையான் முருங்கைப்பட்டை
வாமைதான் ஓரிதழ்த் தாமரைப்படகம்
வகையானவிஷ்ணுகாந்தி நெருஞ்சே. (கசு)

=குரும்பை-தென்னங்குரும்பை.
()மேனிச்சாறு-குப்பைமேனிச்சாறு.

நெருஞ்சானதிருகுள்ளிச் சாற்வகைக்கு
நெஞ்சமேபடிகாலாய் அளந்துக்கொண்டு
நெருஞ்சானஏரண்ட எண்ணெயபடிரண்டு
நேசமுடன்கலக்கியொன்றாய்க் கலந்துக்கொண்டு
நெருஞ்சான சாதிக்காய் சாதிப்பத்திரி
திகழ்ந்த=இருசீரகமும்()கரியுப்போடு
நெருஞ்சான அத்தவொடு அருகிகாயம்
நேரானகருள்ளிக் கோரோசினையாமென்றே. (கஎ)

=இருசீரகம்-கருஞ்சீரகம்-நற்சீரகம்.
()கரியுப்பு-கறுப்பாயிருக்கிறவுப்பு.

ரோசினையாம்வகைவகைக்குக் கழஞ்சதாக
நுணுக்கமாய்மருந்தெல்லாங் கல்வததிட்டு
ரோசினமாமணித்தக்காணிக் சாறுறாட்டி
நுட்பமாய்எண்ணெய்கற்கம் ஒன்றாய்ச்சேர்த்து
ரோசினமாம்அடுபேற்றிக் கடுகைக்கண்டு
ஒருசமத்துட்படவே யிறக்கிடாய்நீ
ரோசினமாயவடுகனுக்கும் ஆத்தாளுக்கும்
ஒருமனதாய்பூசித்துப மனுந்திடாயே. (கஅ)

பணித்திடவேசுரம்போகும் காய்ச்சல்போகும்
வழியில்லைக்கணப்பதி னெட்டுந்தீரும்

பணிந்திடவேநீர்க்கோவை நீர்ககாமாலை
பஞ்சாணம்அஸ்திவெட்டையஸ்திச்சுரங்கள்
பணிந்திடவேகபமீளை சுவாசமெல்லாம்
பதினெட்டிலுள்ளவினை பறந்தேபோகும்
பணிந்திடவேயிருள்ள முருங்கைக்கீரை
பத்தியதானிதுகண்டு பார்த்திடாயே. (௱௪௧)

பதினெட்டுக்காப்பானுக்கு-எண்ணெய்.

பார்த்திடாய்*இருவேளை செம்பரித்தி
பரியமணித்தக்காளி பொன்னுங்காணி
பார்த்திடாய்ச்சூரியந்த நத்தைச்சூரி
பகர்அம்மன்பச்சரி தகரைப்+பாசி
வார்த்திடாய்க்குட்டிவிளாம் பட்டைப்பாகல்
வண்மைகருத்துளசிச்செம் முள்ளியுண்டு
கார்த்திடாய்பாவட்டைப் பொடுதலைத்தான்
கருங்காலி()கழலிலை,,புள்ளடியதாமே. (௱௫௰)

*இருவேளை-நைவேளை-நல்வேளை.

+பாசி-பழம்பாசி

()கழலிலை கழற்சியிலை

,,புள்ளடி-சிறுபுள்ளடி.

ஆமேதான்சுரைஅவரை கொன்றப்பட்டை
அழகானதவமுருங்கை*சாலைமேலும்
வாமேதான்அகத்திக்கற் றாழஞ்சோறும்
வகையானசின்னியீ ருள்ளிப்பூண்டு
காமேதான்இவ்வகைக்கு தனிச்சாற்வாங்கி
கடும்பாண்டம்அதனிற்கால் படிதான்ஊற்று
தாமேதான்ரவியியுவைத்துக் கடைமருந்து
தாரணியில்நல்ஓமம் சாதிக்காயே. (௧௫௧)

()சாலை-கோடகசாலை.

காயோடுபத்திரியும் வசம்புகோஷ்டம்
கண்மணிவேகொத்துமல்லிக் காட்டுச்சீரம்

வாயோடுதிப்பிலியு இஞ்சிக்கூட்டு
வகைவகைக்குவிருகனொடை அஞ்சுதாக
தாயோடுஆமணக்கின் எண்ணெய்தாலும்
தப்பாமல்குறிணியதாய் அளந்துஊற்றி
மாயோடுசாக்கையெல்லாம் பெருகாய்ஆட்டி
வண்மையாய்கலக்கிட்டு மகிமைபாரே. (௱௮௨)

மகிமையாய்எரித்திட்டு எண்ணெயாக்கி
வளமாகசிறுகுழந்தை ()ஆண்டீரெட்டு
மகிமைபாரிதுவயதில் காப்பான்கண்டால்
வகையுடனேபதினெட்டுக காப்பானும்போம்
செகமகிழும்இந்தஎண்ணெய் செப்பக்கூடா
தேயத்தில்உண்மையென்ற பண்டிதர்க்கு
அகமகிழும் நூலிந்த தர்மத்மதோரை
அங்காரத்தால்அவர்பதத்தை தெண்டன்செய்யே. (௱௮௩)

()ஆண்டீரெட்டு -௧௬- வருஷம்,

தெண்டனிட்டுக்கடினமதாய் வாங்கவேண்டாம்
திருடருக்குரியார்கள் தினமும்போற்று
கண்டபடிமனஞ்சலிக்க ஏசலாகா
கடுங்கோபமாயவனா மொழிகூறுதே
பண்டுளபமாலையணி அமைப்பினோர்க்கு
பரிதிமதிவடமொழியும் அவர்க்கெய்தும்பார்
தொண்டுளபமாலையணி மமெனமணித்தாய்
துறைகாணவழிசொல்வாள்தொண்டுபண்ணே (௱௮௪)

தொண்டுபண்ணிதேறுவேர் லக்ஷத்திலொருவர்
தொகைகிலேயுய்துதியந்த வரையுங்காண்பார்
கண்டுகண்டுகருவறிந்துங் கசடாய்ப்போவார்
கருதறியாமூடமதால் கலங்குவார்பார்
அண்டுமட்டும்பிறப்பிறப்பா லைதன்னை
அசட்டுவிலேயுள்ளவர்க்கு அரன்வாக்கில்லை
வண்டுளபமாணிக்க வொருபமான
வாசிதனை தொழுதோர்க்கு வாய்க்குமென்றே (௱௮௫)

மாந்தகிராணி மாந்தஇசிவுசோகை காமாலைசுரக்கட்டி விஷதோஷம்
சுரங்கோழைக்கட்டு கோட்டாவி விம்மல்-தும்
மல்-பித்தகணை பாண்டுக்குகியாழம்.

வாய்க்கவேசிறுதேக்கு வாய்விளங்கம்
வால்மிளகுரோகணியும் சுக்கோடேலம்
சாயக்கவேதிப்பிலி இலவங்கந்தான்றி
தக்கோலம்*மொஸ்தகப்பாய் வகைவகைக்கு
மாய்க்கவேகால்பலமாய் நிறுத்துக்கொண்டு
வன்மையாய்தூளிடித்து பாண்டகத்திட்டு
காய்க்கவேஇருநாழி சலமும்விட்டுக்
கடுகவேஎட்டொன்றாய் காய்ச்சிறக்கே. (௧௮௬)

*பொஸ்தக்காய்-கசகசாவின்ஓடு.

இறக்கியேகொடுத்திடவே கிராணிமாந்தம்
இயல்பானசுரக்கட்டி விஷதோஷங்கள்
உறக்கியேஇசிவுகண்ட மாந்தத்தோடு
உற்றதொருகிராணி சோகைக்காமாலை
கொறுக்கியேகொண்டசுரம் கோழைக்கட்டு
தொடிக்கின்றகோட்டாவி விம்மல்தும்மல்
நறுக்கிவிடும்பித்தகணை பாண்டுஎல்லாம்
நமன்ஓடிப்போவான்பார் கியாழத்தாலே. (௧௮௭)

மாந்தம்-கழிமாந்தம்-கழிச்சல்மாந்தத்துக்குங்கியாழம்.

கியாழத்தால்மாந்தங்கள் போகக்கேளு
கெடியானமாசிபத்ரி பற்பாடந்தான்
காழாந்தால்நாயுருவி முட்காவேளை
கருஞ்சீரகத்துடனே கோழிமயச்சம்
கியாழத்தால்பற்பமாய்ச் செய்துக்கொண்டு
* இருவேலிசங்குசுக் கோடேலம்
கியாழத்தால்ரோகணியும் பறங்கிச்சக்கை
+சிக்கனும்பட்டைக் காவட்டம்புல்லே. (௧௮௮)

* இருவேலி-வெட்டிவேர்.
+ சிக்கனும்பட்டை-சிக்கிமரப்பட்டை.

புல்லானகடுக்காயும் மாசிக்காயும்
புகழானவசம்போடு தான்றிமுத்தம்

வில்லானநீர்ப்படி யிரண்டதாகும்
விதமாகஎட்டொன்ருய்க் காய்ச்சியேதான்
கல்லானமாந்தமொடு சுழிமாந்தங்கள்
* கைப் + பினிப்பால்வந்ததொரு கழிச்சல்மாந்தம்
மல்லானமாதாவாய்ச் சிறுபண்டத்தால்
மருவிவந்தமாந்தமெல்லாம் மயங்கிப்போமே. (கஅ௬௪)

* கைப்பு-கசப்பு.
+ இனிப்பு-தித்திப்பு.

மாந்தத்துக்குவிழுங்குமாத்திரை.

மயங்கிப்போம்விழுங்குமாத திரைதான்சொல்வேன்
மாதரசேசாதிலிங்கம் பூரம்ஏலம்
மயங்கிப்போம்பூங்காவி வகைக்குக்காலாய்
வண்மையாய்கல்வத்தில் போட்டுக்கொண்டு
மயங்கிப்போம்கோதும்மைக் கஞ்சிவார்த்து
மைபோலேசாமம்ரண் டோயாதாட்டி
மயங்கிப்போம்பயறுபோல் உண்டைசெய்து
மரச்செப்பில்வைத்தடைத்து மகத்துவங்கேளே. (கஅ௬௫)

மகத்துவங்கேள்ஓராண்டு பிள்ளைக்கெல்லாம்
0 வல்சிதனில்பிடித்துண்ட மாந்தமேது
மகத்துவங்கேள்சிறுகுழந்தை யானதற்கு
மாசிபத்ரிக்கியாழத்தில் உரைத்திடாய்நீ
மகத்துவங்கேள்செவ்வாப்புக் கரப்பான்போகும்
வரிசையாய்மாத்திரையின் மகத்துவம்பார்
மகத்துவந்தான்என்னசொல்வேன் இந்நூல்போக்கு
மஹாரத்தினச்சுருக்கமென மருவிப்பூணே. (கஅ௬௬)

0 வல்சி-சோறு.

இந்தமாத்திரையை சோற்றுட்பொதிந்திரவில்விழுங்கச்செய்க.

ஒருவருஷத்திற்குகுறைந்தவயது குழந்தைகட்கு

மாசிபத்திரிக்கியாழத்திலிழைத்திடுக.

பூணுவதுஎதென்ருல் இன்னஞ்சொல்வோம்
புனிதருள்ளோரறியவேண்டி புகலுவோங்கேள்

பூணுவதாசனுட மகிமையாலே
புகலுகிறேன்பக்ஷியென்ற கிரகக்கூறை
பூணுவதுபறவைகுண மறியவேண்டி
புகழான்போஷத்தின் பலனைக்காண்கில்
பூணுவதுமாந்தாதி கிருபையெய்தும்
பொல்லாதார்தங்களுக்கு எய்தாதென்றே. (கசஉ)

நீலிப்பக்ஷியின் தோஷகுணம்-சாந்தி.

எய்தாமலவர்பிறந்த நாழிதன்னில்
என்றநீலிபெண்பக்ஷி விழிக்குமாகில்
எய்தாமல்சீறியழுங் கண்ணோக்காடு
இசறியரும்விக்கலுடன் மெய்நீருறல்
எய்தாமல்இக்குணங்கள் தீர்க்கவேண்டின்
இயம்புகிறேன்கழிப்புதனை யியல்பாமைந்தா
எய்தாமல்எண்ணெய்சட்டி யொன்றெடுத்து
என்மகனேமூன்றுவர்ணப் புள்ளிக்குத்தே. (கசஉ)

மூன்றுவர்ணப்புள்ளியிட்டு புட்பஞ்சாந்தி
முக்கியமாய்தாம்பூலங் குங்குமத்தாள்
அன்றுமுதல்பேயினுட நாமஞ்சொளலி
ய-ந-ம-சிவ-நூற்றெட்டு அருளையோதி
வான்றுஇந்தசாந்திசெய்து காலசந்தி
வடதிசையில்கொண்டுவைக்க சாந்தியாச்சு
மான்றுபனையோலையிலே ரீங்காரமிட்டு
மடித்தந்தகுளிசமதைக் கழுத்தில்கட்டே (கசச)

பாலுண்ணுபிள்ளைகட்கு-சாந்தி.

கருத்ததிமூலையுண்ணு பிள்ளைகட்கு
கருக்கோலைதனிலாறு கோணமிட்டு
உருத்தெரியசூலமிட்டு நடுவில்மைந்தா
உவ்வொன்றுரீங்காரம் நாலதாகும்
மருத்தெகியமஞ்சளிட்டுக் குளிசமாடி
* மதுவுடனேஉழுந்தடையுஞ் சந்தனம்பூ
வரிக்தெரியதாம்பூலந் தூபங்காட்டி
வசனிந்தகுளிசமதை கட்டிடாயே. (கசரு)

* மது-கள்.

வேறு.

கட்டவேயின்னங்கேளு கருதுவோர்முனிவோர்நாளும்
வெட்டவேவியாதியெல்லாம் வீறிட்டுபயந்துஓட
தொட்டிடமூலஞ்சொல்வோம் தோஷத்தின்நிவர்த்திக்கேளாய்
மட்டிடுமான்பருக்கு மங்கையர்மாய்கைதள்ளே. (௧௯௬)

தள்ளியேபார்ப்போர்கேளீர் தவனிநல்ஹரியும்ஸ்ரீயும்
வெள்ளியஹரியும்ஸ்ரீயும் மிகமிக்கக்கிலியும்ஐயும்
கள்ளிமைவினைப்பதன்று கருதிநாருயிரந்தான்
தெள்ளியவசியமாகும் சீர்பெறதோஷம்போமே. (௧௯௭)

௧௮-தோஷநிவர்த்தி.

போமெனநோய்வகைக்கு புகழிரண்டொன்பான்தோஷம்
நாமெனதோஷமெல்லாம் நடுங்கிடுமூலத்தாலே
காமெனகழிப்புமந்த கதிர்முகன்சலத்திலோத
வாமெனசிசுவின்கிடு வல்வினைதீருமென்றே. (௧௯௮)

வல்வினைநோய்மருந்தும் வகைவகையுரைத்தோம்நாளும்
தொல்வினைதீரஇன்னம் தோஷத்தின்மூலத்தாலே
கல்வினைஅறுகாலோத கழிச்சல்கள்பறவைக்கூற்கள்
வில்வினையானமூல விர்த்தாந்தமின்னங்கேளே. (௧௯௯)

கேளென்பஞ்சவற்ன கிளிமுகபுட்பத்தாலே
தோளெனதொண்ணூற்றுமஞ்சு தோத்திரவர்ச்சனைகட்செய்து
மாளெனபஞ்சாட்சரங்கள் மைந்தனேபூசிப்பின்பாய்
கோளெனதோஷப்பட்சிக் குலவுஙிர்மூடம்போமே. (௨௱)

குலவுமார்வின்குவில்லு கூரம்புமரம்பூடுக்கள்
நிலவுமாயணிவர்க்கத்தார் நீள்சினத்தோர்கட்கெல்லாம்
அலைவுமாம்கேதுராகு அமிசத்தில் புதன்சுக்கிரன்தான்
பிலமானபார்வையாகில் பிலத்திடுந்தோஷந்தானே. (௨௱௧)

தோஷத்தின்வகையைநன்றாய் தொகுதிகண்டுரைபோமின்னம்
வாசமாம்விதியால்வந்த வல்வினைவருகும்வாறும்
தோசத்தின்வகைகளைக்கண்டு தெளிந்திடஉரைப்போமையா
மாசத்தின்பிலனுகல்ல மறைமறைவிளம்பலுற்றும். (௨௱௨)

விளம்பிடகாலன்பக்ஷி எமன்எமதூதன்மூன்றும்
குளம்பிடகாலன்விச்சூர் கூறுமூத்ததுதான்ஏமன்
தளம்பிடவல்லூற்தூதன் தானிவைவிழிக்குமாகில்
வளமாரணபக்ஷியென்று மாமுனியுரைக்கலுற்றார் (௨௱௩)

உத்தூதானதூதனக்கு ஒருமந்திரமெதிருமில்லை
வித்தூற்றவிச்சூர்நன்று விளம்பிடபேதமில்லை
பத்தூற்றவல்லூற்பால பக்ஷியும்பிலத்தபக்ஷி
மூத்தூற்றமூன்றுபக்ஷி மும்மூர்த்திக்கீடதாமே. (௨௱௪)

வேறு.

இட்டநாள்முதல்த்திங்கள் ஓராண்டுக்குள்
என்றகூவிபக்ஷியது கோபிக்கும்பார்
நட்டமுடிவயிறுபோம் வாந்தியாகும்
நல்லகைளைசூழ்ந்திருக்கும் கண்முழிக்கும்
பட்டபணிதிரேகங்கால் குளிர்ந்திருக்கும்
பக்ஷியுடபிலைத்திலே வருகுங்கூர்தான்
அட்டிதனைசோறுடனே பொரியும்அன்னம்
அடையிரண்டுபிண்ணாக்கு உலர்ந்தமற்சம் (௨௱௫)

மற்சமன்றியிலைக்கறியும் மதுவும்வைத்து
மாஇலையில்படைத்துவைநீ பிணிகளெல்லாம்
குச்சமன்றி*மேதியுடகொம்புசீவி
குஞ்சரமேசந்தத்து விரண்டுஞ்சேர்த்து
வச்சமன்றிதூபமிட்டுத் தாயப்பிள்ளைக்கும்
வசனிதகேன்சாந்திசெய் வடக்கில்வைநீ
மச்சமென்றபக்ஷியின்கூற் தோஷமெல்லாம்
மதிகெட்டேயோடிவிடு மருவிச்செய்யே. (௨௱௭)

* மேதி-எருமை.

மாந்தஎண்ணெய்-வேறு.

செய்திடமாந்த எண்ணெயைச்சொல்வேன்
வைதிடஇஞ்சி சங்குடன்சின்னி
கைதிடகாணி காந்தையும்வன்னி
நெய்திடஎல்லாம் நோய்ப்பிழிந்திடே. (௨௱௭)

பிழிந்துசிற்றே ரண்டத்தின்எண்ணெய்
கலந்திட்டேயொரு கட்டையாலெதிபிடு
செலந்திகள்காச்சி சிறுகஇறக்கிடு
மெலிந்தநோய்திர விளம்புவேன்கேளே. (உ௱அ)

கேளிடுமாந்தம் மலபந்தமாந்தம்
சேவிடுசலத்திற் செனி()சிரமாந்தம்
பாலகர்உன்னைப் பறந்திடும்பாரு
சிலக்கொடிய சீதளம்போகுமே. (உ௱௯)

கணத்தெண்ணெய்.

போகவேயின்னம் புகலுவோங்கேளு
ஆகமருள்கிழங்குடனே உள்ளிதான்
தேகவேசிம்ப திமிச்சாற்வாங்கிடு
ஏகமாயெண்ணெய் எரித்துயுண்ணிடே. (உ௱௰)

உன்னாகணங்க ளோடுமையா
மன்னுமேமாந்த மாணநோய்திரும்
கண்ணுமேகாணு கருதிடும்பாருநீ
எண்ணுமேயிந்தஎண்ணெயைச்செய்திடே. (உ௰௧

கணத்துக்குரியபடஎண்ணெய்.

செய்திடஇன்னஞ் செப்புவோங்கேளு
மைதிடமாஞ்சில மணமுத்தம்சிந்தில்தான்
கைதிடக்காஞ்சொறி கடுகஇடித்துநீ
சைதிடஎண்ணெயில் சரியாய்கலக்கிடே. (உ௧௨)

கலக்கிடுகானல் சாட்டிடுமூன்றுநாள்
அலக்கிடுஎண்ணெய் அஞ்சநாட்கொண்டிடு
தொலைத்திடும்நோயை தோன்றுதுபாருநீ
மலக்கிடஇந்த மகிமையைக்கண்டிடே. (உ௧௩)

கண்டிடநாமுங் கழறினேமின்னந்தான்
வண்டிடஇந்த வாழ்க்கையைப்பாருநீ
தொண்டிடக்கொஞ்சி தொழிலையறிகுவாய்
பண்டிடபந்த பரிக்குஞ்சிபார்த்திடே. (உ௧௪)

பறவைதோஷகுணம்-வேறு

*குஞ்சியின் உடம்புணர்ந்து
    குடல்தனில் பாலுந்தங்கா
நெஞ்சையுஞ்சுழியாய் வாங்கும்
    நெற்றியும் வலிப்புண்டாகும்
*துஞ்சிடும் போதுசற்றே
    துணக்கென வலித்துச்சீறும்
பஞ்சின்மேல் லடியினளே
    பறவையின் தோஷந்தானே. (உ௱௫௫)

பக்ஷிதோஷகுணம்.

உச்சிமூளை தனைப்பற்றி யுடல்மேலெங்கும் வெதுப்புண்டாம்
அச்சமாகநாவுலர்ந்து அதுவே கண்ணும்வெளுப்பெய்தும்
பச்சைமஞ்சள்முறிததாப்போல் பசும்பொன்னிறமாய்முகமிருக்கும்
இச்சைபுரிந்தகுழல்மடவீ ரிதுவேபக்ஷிதோஷமிதே. (உ௱௫௬)

வேறு-அதற்குச்சாந்தி.

பக்ஷியென்றநோயின்னோர் தோஷத்துக்குப்
    பரிதகட்டில்அறுகோணம் வரையீசாறு
கீக்ஷித்தஇருபத்தஞ் சறைவீட்டுக்குள்
    கிணவாக-ய-வ-சி-ந-ம-வென்றுமாறி
அக்ஷியதன்நடுவணையைப் பிடித்துமாறி
    அதனுள்ளேபெண்ணெழுத்து-ம-ய-வசி-யென்றிட்டு
மக்ஷியென்றஅறுகோணங் கிலியும்பூட்டி
    மயேஸ்பரியைபூசைபண்ணிக் கட்டிப்போடே. (உ௱௫௭)

குளிதோஷகுணம்-வேறு.

தேயாகிற்கும் மேல்வெளுக்கும்
    திதேவெளுப்பு மலமொழுகும்
தாயார்முலையில் வாயைவைத்து
    சற்றேயுண்ணுந் திகைத்திருக்கும்
காயா துடம்பு கண்பிசையும்
    கண்டாலிதுதான் அறியீரோ

அ

பேயால்கண்ட தோஷமல்லப்
பெண்ணாட்குளித்துக் கண்டதுவே. (உ௱ஶஅ)

குளிதோஷநிவர்த்தி.

கனமாய்மிதனைக் கண்டுணர்ந்து
கைவேலேவி யிருவேளை
குணமாயோது சடாக்ஷரத்தைக்
குளிர்ந்தநீர்தனை மேல்தெளிக்க
வனமாயிந்நோய் வர்க்கமெல்லாம்
மாறிப்போகு மிதுதன்னால்
தினமும்வேண்டா மூவைந்து
தினந்தான்தெளிக்க நோய்ப்போமே. (௨௱௯௯)

எக்ஷிதோஷகுணம்.

தேயுமுடம்பு மிகநாறும்
செல்லாமுலையும் அருவருக்கும்
தாயைக்கண்டால் உய்த்துயத்து
ஏற்றேபார்க்கும் வயிற்றோவும்
பாயும்புலிபோல் பதறியழும்
பாலரைக்கண்டால் பார்த்திருக்கும்
பாயும்விடையோன் தானறிய
பழுதாம்எக்ஷிப் பகையென்றே. (உ௦௦)

எக்ஷிதோஷநிவர்த்தி.

பகையைத்தீர்க்குஞ் சடாக்ஷரந்தான்
பதுமகிலேயு மதுகாட்டும்
தொகையாய்த்தீர்க்கும் நோய்களெல்லாம்
துன்பமில்லை யிதுவாலே
சிகையைக்கொண்டு இழுத்தாக்கால்
செடலங்காண்பார் மீதுணர்ந்தோர்
பகையுமில்லைப் பறவைகுணம்
பார்க்கப்பொடியா மிதுபாரே. (உ௦க)

நீர்மாந்தகுணம்.

அலையதுமோவாய் முகமின்னி
தண்ணீர்ப்போலே மெய்குளிர்ந்து

மூலையதுமுகவா உடம்பெல்லாம்
முத்துபோலே நீர்பாயும்
குலையதுமூட்டி நீரிறங்கும்
குருகுறெனப்பின் வயிறுவிடும்
மலைபோல்திரண்ட மூலைநல்லாய்
வருத்தேசொன்னோம் நீர்மாந்தம் (உஉஉ)

மாந்தத்துக்குக்கருநீலிக்கியாழம்

மாந்தம்போகக் கருநீலி
மகத்தாஞ்செவியங் கியாழமிட
வந்தநோயும் நீர்மாந்தம்
வணங்கியோடும் பண்டிதரே
சொந்தமிதுதான் அறிவீர்கள்
சொன்னமொழியுந் தப்பாது
எந்தநூலு மிம்மொழிபோல்
எவருஞ்சொல்லார் அசுவனியே. (உஉஙு)

எந்தநோயும் வரும்விதந்தான்
இனித்திபண்டமும் தேங்காய்
சொந்தவுளுந்தை யுளுவையுடன்
சோறும்வானை வரால்கெண்டை
சந்த*மேதிப் பால்இறைச்சி
சருகுந்தண்ணீர் புளிமோர்தான்
வந்தபாகல் சுரைக்கதலி
வருகுமாந்த மினவதின்றால். (உஉச)

*மேதிப்பால-எருமைப்பால்.

தலைமாந்தகுணம்.

தலையுங்கனத்துக் குடனூதிச்
சரீரந்தன்னில் வலியுண்டாம்
குலையும்வலித்துத் துள்ளிவிழும்
குளிருஞ்சுரமும் வியர்த்துவிடும்
சிலையின்புருவம் தலைகிமிரா
சேங்கடைமிகவே வலியுண்டாம்

மலைபோல்பருத்தத் தனத்தாளே
வாதைப்படுத்துந் தலைமாந்தம். (௨௨௫)

வேறு.

மந்தமென்றவகைகிர ஏலாதியுண்டை
மைந்தனைகாட்டிடவே மயங்கிப்போகும்
எந்தவகைநோயெல்லாம் ஏலாதிதன்னால்
இறந்துவிடும்பண்டிதத்தை பூணிப்பாரு
வந்தவிதிப்பயனறியா வயித்தியோர்கள்
வாதத்திற்கெட்டலைந்து வயித்தியம்பாரார்
சொந்தமெனக்கொண்டாடிப் பண்டிதத்தை
சுருக்கெனவேபாரார்கள் சனகர்தானே. (௨௨௬)

வேறு.

வயிறுகழியும்விதம்விதமாய்
மார்பைவலிக்கும் பற்கிட்டும்
பயறுகடித்தாற் போல்தந்தம்
பதறிகடிக்கும் இசுப்பெடுக்கும்
கயிறுமுறிக்கி விட்டாப்போல்
காலுங்கையுந் தானிழுக்கும்
=எயிறுதிறக்கமாட்டாது
இரங்காதன்னந் தண்ணீரே (௨௨௭)

= எயிறு-பல்.

வேறு.

தன்னிமையால்நோயுதித்த வாறேதென்னில்
தன்வயதுபத்தெட்டு இந்நாட்குள்ளே
உன்னிமைக்குள் தீனியினால் கர்மத்தாலும்
உடம்பிலுள்ளகூட்டாலும் வினையினாலும்
வென்னிமையால்நோயுதித்த வாறிதாகும்
விபாமென்னக்காந்தாரிக் கியாழத்தேற்று
சொன்னிமைக்குள் ஓடிவிடும் இக்குணங்கூற்
றுஇல்லாநூலிதுதான் முற்றுமென்றே. (௨௨௮)

### வேறு.

அடக்கவே பெருகஉந்தி
அதிகமாய் சரமுந்தோன்றும்
முடக்கலு*முகடுபோர்க்கும்
மூரிகோட் டாவியுண்டாம்
விடக்கமாய் இசிப்பெடுக்கும்
விளையெழுந் திருக்கும்வேர்க்கு
அடக்கவுந் தலைமாந்தத்தை
யார்அறிந் தடக்கவல்லார். (௨௨௧)

* முகடு-உச்சி

### வேறு.

வல்லோர்கள் நூல்பார்த்தால் வாய்க்கும்யோகம்
வழிகாண்பீர்வகையறிய தொழிலுங்காண்பீர்
நல்லோர்கள்மிதுனத்தோர் நலாத்தினோர்க்குத்
துருவமென்றமேருவங்கே தோன்றுந்தோன்றும்
நல்லோர்கள் இந்நூலைக் கண்ணில்காண்பார்
காதாந்தம் வேதாந்தம் நல்கவல்லோர்
வெல்லுவீர்தொகைதொகையாய் மருந்தைச்செய்து
விபரமாய்நோய்க்கிய விண்டுபோமே. (௨௩௰)

### காந்தாதிக்கியாழம்.

விரண்டோடகாந்தாதிக் கியாழஞ்சொல்வோம்
* மெய்புதகம்பெருமருந்து சிற்றேரண்டம்
விரண்டோடகரிவிரட்டி †கொட்டான்சின்னி
மேலானகடுக்காய் மாசிபத்திரி
திரண்டோடபற்படாகம் தான்றிமுத்தம்
திரிபலையும்அதிவிடையம் ஊசிப்பாலை
கரண்டகம்போல்கருக்கியிதை கொட்டிப்போட்டு
கருநீலிநிலவேம்பு () பொன்தக்காயே. (௨௩௧)

---

* மெய்புதகம்-சிறுநீர்.

† கொட்டான்-கொய்க்கொட்டான்.

() பொன்தக்காய்-கடுக்காயின்தோலு.

காயோடுபத்திரியுந் தாளிசந்தான்
 கருவேப்பிலையோடு மூத்தஞ்சிற்றாமுட்டி
ஏயோடுதூளிடித்து அதனிற்போட்டு
 இரண்டுபடிதண்ணீர்விட் டெட்டொன்றாக்கி
நோயோடு*பயிரவனுங் காந்தாதிச்சேர்த்து
 நோகாமலெடுத்திய கணரோகங்கள்
வாயோடுபேசாமல் சர்வகணமெல்லாம்
 வணங்கியேகொட்டோடும் வண்மைபாரே. (உசுஉ)

* பயிரவன் பயிரவமாத்திரைக்கூட்டியிழைக்க.

கருநீலிக்கியாழம்.

பாரேநீகருநீலிக் கியாழவண்மை
 பார்தனிலேவிள்ளார்க விண்டோம்உண்மை
பாரேநீசெவ்வந்தி விஷ்ணுகாந்தி
 பரும்பாலைதிருத்*துழாய்ஜனகிழூண்டு
பாரேநீபுங்கோடு மாசிபத்திரி
 பனையீர்க்குவேப்பீர்க்குப் பண்பதாக
பாரேநீபுரசுமுத்தங் கொத்துமல்லி
 பஞ்சமோதகத்துடனே யொன்றாய்ச்சேரே. (உசுங)

* துழாய்- துளசி.

சேர்த்தந்தமருந்தெல்லா மொன்றாய்ச்சேர்த்து
 சிவசிவாபெரும்பாண்டந் தன்னிலிட்டு
வார்த்தந்தமணல்ஊற்றின் தண்ணீர்தானும்
 வாசதிலேவிருநாழி அளந்திட்டேநீ
பாரத்தந்தஅடுப்பேற்றித் தீயைமூட்டி
 பண்பாகவொருவிறகு கொண்டெரித்து
கார்த்திடுநீமயேஸ்பரனே தியானம்பண்ணி
 காய்ச்சியதையெட்டொன்று யிறக்கிடாயே. (உசுச)

இறக்கியேகாசியென்றக் குப்பிக்கேற்றி
 என்னசொல்வேனிதன்பெருமை விபரங்கேளு
இறக்கியந்தகுப்பியதை பதனம்பண்ணி
 என்னசொல்வேனிதன்பெருமை மக்காள்மக்காள்

இறக்கியதோர்நோய்வகையை இயம்புவேன்பார்
 எழிலில்லாகணபாண்டு கணகாமாலை
இறக்கியேகருநீலிக் கியாழந்தன்னை
 இனத்தோடேபதனம்பண்ணி வைத்திடாயே. (உ௬௫)

குடல்வாதத்திற்கும்-உரம்விடுதற்குந் துவாலையிடதயிலம்

வேறு.

வல்லாப்பூண்டுப் பலம்பத்து
 வனத்தின்கடுகு பலமபத்து
கல்லாக்குழியின் தைலமிதை
 கடுகஎடுத்துப் பதப்படுத்தி
பொல்லாநோய்கள் குடலவாதம்
 போகும்போகும் துவாலையிட
வல்லாப்பிள்ளை உரம்விழுந்தால்
 வலைபோற்பூச உரம்விடுமே. (உ௬௬)

சதிபுருஷாள்தோஷம்.

அரிவையர்க்கும் ஆண்பிள்ளைக்கும்
 அதனிற்றோஷமேதென்றும்
கருவாரம்அஞ்சு மாதத்திற்
 காணிற்கலந்த தாய்மூகத்தை
பெறுவாளத்த பிள்ளைக்கு
 பேஙிசுருக்கும் வயிற்வலியும்
கருகுமுகமும் போயின்குணம்
 கண்டு அறிந்து செய்வீரே. (உ௬எ

சதிபுருஷாளில் தோஷமேதெனில்.

ஸ்ரீ-ரு-மாதகர்ப்பமா யிருக்கிறகாலத்தின் புருஷன் புணர்ந்தால் (அப்) பிள்ளைப்பிறந்தால் மேற்சொன்ன வியாதிசம்பவிக்கும்.

அதற்குச்சாந்தி-வேறு.

செய்யவேஅஞ்சுவற்ன மலரெடுத்து
 சேகரமாய்அஞ்சுவற்ன மலரேஅன்னம்

ஐயமில்லா அஞ்சுவெள்ளிப் பணமேவைத்து
அதினுடனே தூபதீபம் நெய்விளக்குமேற்றி
வையமென்ற + கதலியிலே யுருவெழுதித்தான்
வறைதோறுஞ்சாம்புராணி வர்த்திநட்டு
பொய்யல்லநான்சொன்னேன் பண்டிதரேஐயா
பொதுவாகமுச்சந்தி அதில்வைப்பீரே. (உ௲அ)

+ கதலி-வாழை.

வைத்திடவேதோஷமெங்கே கிரகமெங்கே
வலியெங்கேநோயெங்கே பறந்துபோகும்
நையடியாஞ்சிவடியின் பருவந்தன்னை
நாட்டமுடன்கண்டறிந்து கருத்திற்பூண்டு
மெய்யுள்ளவசிஷ்டனைப்போல் பெருமைபூண்டு
மேலானபத்மகுணஞ் சாரவோர்க்கு
பையமில்லேமோக்ஷமுண்டு நாகம்போச்சு
பழிபாதகர்க்கின்றால் கிட்டிடாதே. (உ௲௧)

வேறு-கலிவிருத்தம்.

குன்மவாய்வு-அ-ம்-வருவிதம்.

ஏதநாங்கிது எட்டுடன்குன்மமே
போதவேகெண்டைப் புரட்டுமேவாய்வது
ஏதமிலாம வியம்பியமாமுனி
சூதுசெய்வோர் + பட்சந் தோன்றிடுங்குன்மமே. (உ௲௨)

+ பட்சம்-பக்கம்.

குன்மம்-அ-க்கும்-மருந்து,

தோன்றியகுன்மம் துலையவகைகேளு
பான்றியசூதமும் பகர்கந்திலிங்கமும்
வேன்றியகழற்சிப் பருப்புடனுவியும்
ஏன்றிந்துப்புக் + காரம் இயல்சினக்காரமாம். (உ௲௩)

+ காரம்-வெண்காரம்.

மாவிதாரமும் மஹா * திரிபலை
ஏலவல்திரிகடுகம் விருகளும் ரண்டகாய்
கோலக்கள்ளிக் கொழுந்தின் சாற்றிவிட்டு
மாலையுங்காலையும் நாண்மூன்றுமாட்டிடே. ௨௬௨

* திரிபலை-கடுக்காய்-தான்றிக்காய்-நெல்லிக்காய்.

ஆட்டியுலர்த்தியமர்ந்தபற்பத்தை
எட்டிக் * கோவெண்ணெய் பிசைந்துநாள்மூன்றுகொள்
கேட்டுக்கேட்டந்த நோய்வகையெட்டுமே
பாட்டிம்பட்டோடிப் பறந்திடும் பாருமே. ௨௬௩

* கோவெண்ணெய்-பசுவின்வெண்ணெய்.

பாருஞ்சிசுவதை பாலத்தைச்செய்தபேர்
ஆருமறியவேயாந் சொலவோங்கேள்மக்காள்
நீரும்அபானத்தில் நின்றுபொறிகொண்டு
சோருமூலத்தில் குடுண்டாகுமே. ௨௬௪

உண்டானவிந்து ஒதுங்கிப்பொழிந்துபோம்
இண்டான * மூவருந் திகைத்திட்டுநிற்பார்கள்
கண்டோமது ஒன்றால் காஷியசீகமாம்
விண்டோமுண்மையை விளம்புவோமின்னங்கேள்
நண்ணவமூலம் நாசமதாக்குமே. ௨௬௫

* மூவர்-வாதபித்தசேஷ்மம்.

நவமூலத்துக்கு-மருந்து.

ஆக்கியமூலம் ஒன்பதும்ஓட
பாக்கியமொன்று பண்பாயுரைக்கக்கேள்
தாக்கியபூரம் * தான் () சிலை () காரம்
தேக்கியகல்நார் சேருநீறுந்துமே. ௨௬௬

---

* தான்-தாளகம்.

() சிலை-மனோசிலை.

() காரம்-சீனக்காரம்.

ஐந்தும்ஒருபலம் ஆகநிறுத்து
பந்துக்கொடிக்கள்ளிப் பாலைவிட்டாட்டிடு
வந்தகாடசென்றபின் வழித்துக்குகையினில்
சந்துவாய்ச்சிலை தடித்தமண்போட்டிடே. உ௬எ

போட்டெடுக் * குக்குடம்பொருமுஞ்சரக்கது
ஆட்டிடுகல்வத்தில் ஆவின்பால்கள்ளிப்பால்
வாட்டிடுசாமம் இரண்டதுவாகவே
நீட்டிய ○ சம்பழச் சாறுவிட்டாட்டிடே. உ௬அ

* குக்குடம்-கோழியளவுபுடம்.

○ சமபழச்சாறு எலுமிச்சம்பழச்சாறு.

சாறும் * குமரி கையாந்தகரைச்சாற்
றாறுயரைத்துத் தூதுளங்காய்போல்
ஊறுயுலர்த்தி புறுபலங்கொண்டிட
தாறுயொன்பதுந் தாண்டிப்பாருமே. உ௬௯

* குமரி-கற்றாழை.

வேறு.

பார்தனிலேவழுவம் பறந்துபோச்சு
பயனறிய இன்னமொன்று பகருவேன்கேள்
ஆரறிவாரிந்நூலை மூன்றுநூறு
அவனிதனில்கிட்டாது கிட்டிலையா
பேரறியதர்மசிவ யோகியென்று
பேர்பெரியலோகத்தில் புகழ்வாரப்பா
மாறியப்போருர்கள் இந்நூல்மார்க்கம்
மகத்தானதவத்தோர்க்குக் கிட்டுமென்றே. உ௭௰

கிட்டுறலாவகென்ன நூல்பார்த்தென்ன
கிரியைகற்றும்பொருளறிந்தும் பலன்தானென்ன
மட்டில்லா இரகசியில் வாதபோர்க்கு
வாய்த்தென்ன மாய்ந்தென்ன வரிசையில்லார்
தொட்டிடமும்விட்டிடமும் யாதோஏதோ
துலங்குரத்னமாணிக்க அம்மான்போற்ற

மட்டவிழுமலர்க்குழலாய் வகுத்துரைத்த
மகிபதியைக்கண்டுணர்ந்து வணங்குழந்தே. ௨௫௧

கொடியாம்பல்-மகோதரம்-கிராம்பல்-பாய்ச்சல்.

குஷ்டத்துக்குரவுத்திரகாளிக்கியாழம்.

வேறு-தாழிசை.

இதுசந்தவிருத்தமாகவழங்கும்.

வணங்கும்முறையினி யாவரும்பேறுபெறுமுறையை
விசனத்துடனறிவித்தனர்க் கியாழமதைச்சொல்வோம்
வணங்குமரிகொடிவேலியுஞ் சிறுதேக்குடன்முத்தம்
வண்டோதரிசிதேவியுங் கண்டாத்திரிவசம்பும்
வணக்குன்றியுமரவாழையுங் கழுதாழையுஞ்சின்னி
வசிபாலையுமட்பாலையு கீராறியநெருப்பும்
வனசங்குடன்சிறுபாகலும் பெரும்பாகலுமொக்க
பணிதாங்கியுகாய்ப்பாகலும் ஞெவியுமவாங்கே. ௨௫௨

கெவுடாலுடன்கெடுமாதளை கொடிபாசையும்அரத்தை
கேன்துமமையுந்தாளிசமுங் கொத்தயல்மிளகும்
கெடுதியாவையும்பலமொன்றதாய் நிரையாகவேவாங்கி
நிரும்படிபக்காகவே பாண்டத்தவிறாற்றி
வரையாகவேதிமுட்டிடீ வடிகங்கலேபூண்டு
வசனித்ததிலொன்றாகவே சாடிதனிலாற்றி
குறையாதெனநிற்கும்பலங் கொடிய * நிம்பப்பட்டை
கொண்டேயிதிலமறவாயிலவ தூளாயிதைசெய்பே. ௨௫௩

* நிம்பப்பட்டை-வேப்பம்பட்டை.

வேறு.

செய்தக்கசட்டிகளில் தூளைத்தூவி
செயம்பெறவேபதனமதாய் பன்னுபன்னு
கொய்ததிலேகரண்டிசலம் உள்ளேகொள்ளு
கொடியமகோதரம் கிராம்பல்பாச்சல்
வையகத்திலுள்ளபரி சனங்கள்குஷ்டம்
வாசமுடன் அக்கினியா மந்தத்தோடு

கேளப்பா அக்கிராகாரஞ் சிற்றரத்தைக்
கெட்டியாய்வகைக்கொரு பலமதான் தூக்கே. ௨௬௪

தூக்கியே யிளவறுப்பாய் வறுத்திடித்து
துப்பானதேனுடனே கொட்டிக்கிண்டி
காக்கியே அப்பாலே யிறக்கிக்கொண்டு
கணபதிக்கும் வல்லபைக்கும் வணங்கிப்பூசி
போக்கியே குருநமனை பூசித்தேதான்
பூவைக்குமமனோன்மணிக்கும் போற்றிசெய்து
பாக்கியந்தானிதையெடுத்துக் கழஞ்சியுண்ண
பறந்தோடும்வினையதனைப் பகருவோமே. ௨௬௫

பகரயிலே மேகமொடு கிரந்திசூலைப்
பறந்திப்புண் ஆறாயாப்பு * வாழைசூலை
நகரயிலே பவுத்திரங்கள் ஆசனமாம்புற்று
நாசமாங்கண்ணனிந் திரிதிசூலை
மகரயிலே தவளைபுற்றுப் பக்கசூலை
() மடிப்புற்று லிங்கபுற்று யோனிப்புற்று
வகரயிலே குலைரணம் சூலைவாய்வு
வாய்ப்பேசாதோடுமே மருந்திதுபாரே. ௨௬௬

* வாழை - தொடைவாழை.

() மடி - வயிறு.

வேறு.

மருந்தானசூக்ஷ மகத்துவங்கோடி
அறிந்தேயிதனை யாருமியம்பப்போர்
முழுதுமேலோக முறையிதாமேயா
பழுதுவாராது பார்த்திடுமகனே. ௨௬௭

மலட்டுரோகம் - மேகம் - குஷ்டத்திற்கு
உலோகசெந்தூரம்.

பார்த்திட இன்னம் பகருவோம்சூக்ஷம்
ஆர்த்திட * லோகமதைப்பொடி () சினம்

---

* லோகம் - அயம்.

() சினம் - படிக்காரம்.

பாய்ச்சியமண்ணைப் பதுங்காகப்பூசிடு
காய்ச்சிவந்த கதிர்மதிவைத்திடு
வாய்ச்சியவைத்தை வரப்புடம்போட்டிடு
தேய்ச்சியவெந்த செந்தூரங்கண்டிடே (௨௮௨)

காணவேவெண்ணையில் கடுகுபோல்தின்றிட
கோணுமேமேகங் கோன்றுநீர்ப்பாய்ச்சலும்
வேணவேபித்த வெட்டையுங்காந்தலும்
தாணுவேயண்டத் தலைவலிபீநசம் (௨௮௩)

வலியொடுகுன்மம் வாய்நீர்க்குன்மமும்
பலியிடுமாத்தக் கிரிச்சினம்பாணையும்
சலியபத்தனி சயித்தியசேட்டுமம்
விலியொடுகண்ட வித்திரியம்போகுமே. (௨௮௪)

போகுமேயிந்த பெருமைவங்கத்தை
வாகுடம்சொன்றோம் வரிசையறிந்திடு
பாகவேமூவரும் பதுங்குவாரித்தால்
ஆகமேயறிய அரன்செயல்கண்டிடே. (௨௮௫)

விந்துஸ்தம்பனம்.

கண்டிடக்குன்றிக் காயையரைத்துநீ
தின்றிடுநல்லெண்ணெய் செந்தூரம்வைத்துநீ
கொண்டிடுக்கெட்டக் குறைச்சலாங்கண்ணிகள்
நன்றுநகைப்பார் நளினப்பெண்களே. (௨௮௬)

பெண்டுகள்கெட்டப் பேதைகாமத்தால்
துண்டுகள்பண்ணுந் துராக்கிரமசித்தினி
கண்டுநகைக்க சடமெடுக்காதே
முண்டுமுன்சொன்ன மொழியையின்றிடே. (௨௮௭)

தின்றிடுமூவகை சாதியாங்கன்னிகள்
அன்றியுமீனவிடார் அல்லும்பகலுமே
கண்டுசுக்கில ஸ்தம்பனம்போலவே
என்றுமொருவர் இயம்பிடார்பாருமே. (௨௮௮)

போட்டதுபேயென்று எண்ணெயும்வார்த்துநீ
காட்டிடுதீபத்தைக் கதிரோட்டைமூடியே
நாட்டது-கிரீயும்-இரீயும்-ரீயுமாய்
சூட்டதுலக்ஷம் தோத்திரஞ்செய்திடே. (௩௱௩)

செய்துநீயோட்டைத் திறந்திடும்போதினில்
மைதிய‡பூரம் நல்கும்புனுகுடன்
மைதியசந்தன சாந்துகஸ்தூரியும்
பொய்தியகுங்குமப் பூவுடன்வங்கமே. (௩௱௪)

‡பூரம்-பச்சைக்கர்ப்பூரம்.

வங்கமொன்றாகவே சாரித்துஒன்றதாய்
தங்கச்சிமிழினில் தாக்கியடைத்திடு
பங்கமதிவென்று பாருருலட்சம்
குங்குமலாடமே கூறும்பணவெடை. (௩௱௫)

பணவெடைபோட்டிட பதினோருலோகமும்
உனைவிடாதுண்மைதான் உகந்துபாருநீ
தனைவந்துசுற்றுவார் தன்மையாமிக்கரு
மனையூருமோகன வசியசித்தாடுமே. (௩௱௬)

சித்தாடஇன்னமுஞ் செப்புறேன்மக்காள்
வித்தையாலோக விசிதந்தான்முன்னமே
கொத்துடனுருங் குறியைவிளம்புவோம்
பததினிலொன்றைப் பகருவோம்பாருமே. (௩௱௭)

ஜெகஜாலமை.

பாருமதேசிலையிந்திரகோபமும்
சேருமதனப்பூ செங்குழியானையும்
சாருமேயிப்புலி சந்தனங்கிராம்புதான்
மாருபொன்னூமத்து மஹாநீரிலொட்டியே. (௩௱௮)

நின்றுதொட்டால்வாடி நின்றுசிணுங்கியிம்
மன்றயக்காந்தமும் மாடையாமுட்டையும்
தென்றறிஅட்டையுஞ் செம்போத்தின்பித்தும்
துன்றுமுதற்பிண்ட தொல்லைமாக்கருவென்றே (௩௱௯)

மாக்கருக்கோட்டான் பதனக்கருவி
தாக்கதிருபதுந் தாமெருக்கவிழுகன்
ஆக்கியொன்றென்று சூக்ஷமதாக
ஆக்கியேஅகவிட்டடைத்திடக்கேளென்றே (௯௰)

கேளேயிவையெல்லாங் கெவுரிகாரம்பசு
வாளேஅந்நெய்விட்டுமடந்தையர்சிலையில்
தாளேதலைப்பிள்ளை ஓட்டினில்தீபமாய்
மாளேயானைக்கண் சட்டியில்மைபற்றே (௯௰௧)

௯௰-வது-செய்யுளில் அடைத்திடக்கேளென்றே யென்றதால் கன்னிகைநாதங்கூட்டவென்று சிலபிரிதிகளிலெழுதி யிருக்கின்றன. இதைச்செய்பவர்கள் கவனமாய்ச்செய்யவும்.

வேறு.

அவனியென்றஉலகமெல்லாஞ்சித்தாயாடும்
ஹரஹராஇதுபோல யார்தான்சொன்னார்
மெவனியென்றஸ்ரீவசியஞ் சிணைத்திற்சித்தி
மேன்மேலாயிருந்தவிடமேவியாடும்
புவனமெல்லாமெச்சுமிந்த சட்டைபோலே
புகழ்வார்கள்சித்தரவர் லோகத்துள்ளே
தவசிலேயோர்வேந்தருக்கு அழுரிதன்னில்
தாம்பூலந்தனிலிடவே வகைசொல்வேனே (௯௰௨)

சொல்லதுமுன்வார்த்தைக்கு எதிரொன்றில்லை
ஜெகஜாலமுழுதுமிந்த சட்டாலாச்சு
அல்லுரவிழுழுதுமுனைகாறவிட்டால்
அந்தஇடிவிழுந்தப்போ லேங்கிநிற்பார்
வெல்லடாலோகமெல்லாம் வித்தைக்கொண்டு
விளையாடும்பாண்டிதருக் கிதுதான்வேணும்
கல்லுமேகதைகளைத்தாமயங்கிப்போகுங்
காண்காகூழிவிநோதஜெகஜாலமாமே (௯௰௩)

கண்டார்லோஇந்நூலே ஜகத்திலேனோர்கள்
கையாடுந்தொழில்முறைமைகன கம்போலாம்.

ஒன்றுதுரவிபுடமாய்ப்பத்துநாள்வைத்து
உத்தமனேவாலைதிராவகமாய்வாங்கி
ஒன்றுசீசாவி லடைத்துக்கொண்டு
உத்தமனேநோய்மனிதர்க்கியந்திடாயே (௯௨௧)

வேறு.

ஈய்ந்திட.இன்னம் இயம்புவோமக்காள்
ஆய்ந்திடத்தாம்பூலந் தடவியேதின்றிட
வாய்ந்துமேயிளை க்ஷயகாசஜயமும்
போய்ந்தியிற்காணாமற் போகுமிதென்றே (௯௨௨)

போகுமிந்நூல்போல் புகழுமில்லை
ஆகுமிந்நூலிலறிவாரறிவுளோர்
தேகமிந்நூலில் தேளியுமிதற்குள்ளாய்
வாகமபோத வரிசையிதென்றே (௯௨௩)

வரிசையாய்ச்சொல்லுவோம் வகையினிகேளு
பரிசமாம்விந்து பிராணையமெல்லாம்
தெரிசிக்கவாகும் தெளிவிந்நூல்பார்த்தால்
பிரிசமாமிந்நூல் பேசியிட்டேனே (௯௨௪)

பேசியபோது பிறவிநோயெல்லாம்
நாசினமாகுந் தொடுத்திந்நூல்பார்த்தால்
காசியில்முத்திக் கடாட்சமுங்கிட்டும்பார்
மாசில்லாநூலை மருவியேபார்த்திடே (௯௨௫)

பார்த்திடஇன்னம் பகருவோங்கேளு
வார்த்திடவா லுழுவையுஞ்சீரகம
கார்த்தசீரகம் கானகசீரகம்
ஆர்த்திவகைக்கு அஞ்சுபலமென்றே (௯௨௬)

பதமாயிடித்துப் பகருவோங்கேளு
அதமாக்கருவாப் பட்டைப்பலம்பத்து
விதமாங்காயலூர் வெல்லம்பலமஞ்சு
சதமாமிதற் கிரட்டிசலமென்றே (௯௨௭)

சாலமிட்டுவாரமொன்று ரவிதனில்
சகலமதுபாண்டஞ் சரியாய்நிறைத்திட்டு
சலமதின்வாயை சதுராத்தில்மூடி
சலமதுசந்து சீலைகட்செய்யே (௯௨௮)

செய்துதீதியைத் திறமதாய்மூட்டி
கொய்துமேசாமங் கொண்டதில்திராவகம்
வைதுமேயமுர்தம் வழியுமதுகண்டாய்
மைதுமிதற்கு மனோமணிபூசையே (௯௨௯)

பூசித்துக்கொள்ள பொறிகுணநோயெல்லாம்
வாசித்துஓடும் வலுமைவிதுகண்டால்
நேசித்துநேமநிராமயமாகநீ
வாசித்துகற்கம் வண்மையநேகமே (௯௩௰)

வண்மையாயிந்நூல் வையகந்தன்னில்
தண்மையாய்ச்சொன்னோம் தாக்ஷண்யமாகவே
உண்மையாயிதனை யுரைத்தப்படியே
பெண்மையாய்சித்திப் பெறுவீர்பண்டிதரே (௯௩௧)

பண்டிதரிந்நூல் பார்த்தபண்பேர்கள்
அண்டியவரை யடுத்துபூசித்து
நன்றாய்நமஸ்கரி நாள்பனிரண்டாண்டு
தொண்டுகள்செய்திக்க தொகுதியைவாங்கிடே (௯௩௨)

வாங்கியவரைவகை மோசஞ்செய்திடா
நீங்குவந்தெய்தும் நிடலென்றுபாரு
பாங்குடன்சொன்னபக்ஷமிதுதனை
மாங்குள்ளமானிடர் மறந்திடார்பாருமே (௯௩௩)

பாருமின்றென்று பகருவோம்பின்னாய்
தேருமிதனில் எக்ஷணிப்பாடலில்

ஆருமறியவே யாஞ்சென்னேமுண்மைதான்
கூரிதுகண்டவர் குவலயசித்தரே (௧௩௪)

சாதிபத்திரிதிராவகம்.

இத்திரமாயொன்று செப்புறேங்கேளு
பத்திரிசாதிக்காய் கிராம்புடனேலமும்
கத்திரிவித்துடன் ‡கற்பகவெல்லமும்
மத்தித்திடித்துநீ மைபோலேதெள்ளிடே (௧௩௫)

‡கற்பகவெல்லம்பனைவெல்லம்

தெள்ளிநீயாவின்மோரைக்கலந்துநீ
கொள்ளுதுபாண்டங்குறைபடாவார்த்திடு
துள்ளியவாயை நன்றதாய்மூடிடு
மள்ளிமபெயில் மகிமையாயேற்றிடே (௧௩௬)

ஏற்றியெரித்திடு இன்னமுஞ்சொல்வோம்
பாற்றியசீசாவில் பதங்கமிறங்கிடும்
கோத்திரமிந்த குலத்தைவிளம்புகிறேம்
தேற்றியசாதிபத்திரி திராவகந்தானே (௧௩௭)

தானேதந்தநோய்க் கண்டமனிதர்க்கு
வானேதாம்பூலத்தில்வகையாய்தின்னவியர்த்தால்
மானேமடிந்திடு மாந்தநோயெல்லாம்
கானேயகன்று கதிகெட்டுமாளுமே (௧௩௮)

குஷ்டத்துக்கு-லிங்கதயிலம்.

மாளஇனியின்னம் மறையுறேம்பாருநீ
தாள்புங்கம்வித்துச் சங்குடன்சிற்றண்டம்
கேளேவினியின்னம் கெந்தகவின்வித்துடன்
காளேமஞ்சிலக் கர்ப்பூரம்லிங்கமே (௧௩௯)

லிங்கமவ்வளவுக்கு நிறைபலம்அஞ்சதாய்
வங்கமுஞ்சேர்த்து இடித்து தூளாக்கிடு
தங்கமிதற்கொப்போ தானிதுவுண்மைதான்
பங்கமில்லாவகை பாண்டத்தில்போட்டிடே (௱௬௰)

போட்டபின்சட்டிப் பொருந்தவேமூடிநீ
காட்டதேதமரு கதிர்போலசெய்திடு
வெட்டக்குழிதனில் வெண்கலயமிட்டு
மூட்டுமேல்பாண்டத்தைப் பொருந்தவேமண்ணிடே (௱௬௧)

பொருந்தஎருவை பொடியாயடுக்கி
தெரித்தமட்டந்த திவ்விகலயத்தில்
பருந்தமனோபனி வாழ்க்கையைப்பூசிடு
அறிந்துஅறுதினம் ஐஞ்ஞூறுவருவேற்றே (௱௬௨)

ஏற்றியபின்பு இறங்குந்தயிலந்தான்
தோற்றியசாடியில் துடுக்கென்றடைத்திடு
சாற்றியமென்ன பருட்பொப்பிதாகுமாம்
நேத்திரநோய்கள் புழுவெட்டுவெண்குட்டமே (௱௬௩)

துஷ்டம்பெரும்புண் குலேநோய்ஐயமும்
கெஷ்டநரை சிக்கினவர்க்கும்
சகுபாம்பாலனும் பருவமுமெய்தும்பார்
இஷ்டமாயியம்ப என்றால்முடியுமோ (௱௬௪)

முடியும்வகையை முறைமுறையாகவே
கெடியாயுரைத்தோம் கீர்த்தியுண்டாகநாம்
பிடியேவகையைதான் பிரபலமாக்கிடும்
நெடியமாமுன்றூறும் பேசித்துப்பாருமே (௱௬௫)

பார்க்கவேயொன்று பகருவோய்கேளு
சேர்க்கமாமென்றால் செப்பிடுமுண்மைதான்
பார்க்கவேஅசுவனி வளமையின்றாகிது
தார்க்கவேயொன்மொழி தபோபலனெய்துமே (௱௬௬)

ஆருமறியவே யாஞ்சென்னோமுண்மைதான்
கூறிதுகண்டவர் குவலயசித்தரே (கூகூ௪)

சாதிபத்திரிதிராவகம்.

சித்திரமாயொன்று செப்புறேன்கேளு
பத்திரிசாதிக்காய் கிராம்புடனேலமும்
சுத்திரிவித்துடன் ‡கற்பகவெல்லமும்
மத்தித்திடித்துநீ மைபோலேதெள்ளிடே (கூகூரு)

‡கற்பகவெல்லம்பனவெல்லம்

தெள்ளிநீயாவின்மோரைக்கலந்துநீ
கொள்ளுநுடபாண்டங்குறைபடாவார்த்திடு
வள்ளியவாயை நன்றதாய்மூடிடு
மள்ளிமடுபபில் மகிமையாயேற்றிடே (கூகூசா)

ஏற்றியெரித்திடு இன்னமுஞ்சொல்வோம்
பாற்றியசீசாவில் பதங்கமிறங்கிடும்
கோத்திரமிந்த குலத்தைவிளம்புகிறோம்
தீற்றியசாதிபத்திரி திராவகந்தானே (கூகூஎ)

தானேதந்தரோய்க் கண்டமனிதர்க்கு
வானேதாம்பூலத்தில்வகையாய்தின்னவியந்தால்
மானேமடிந்திடு மகந்தரோயெல்லாம்
கானேயகன்று கதிகெட்டுமோளுமே (கூகூஅ)

குஷ்டத்துக்கு-லிங்கதயிலம்.

மானஇனியின்னம் மறைபுறேம்பாருநீ
தாள்புங்கம்வித்துச் சங்குடன்சிற்றண்டம்
கேளேவினியின்னம் கெஞ்சாவின்வித்துடன்
காணேமனோசிலைக் கற்பூரம்லிங்கமே (௯௯௯)

லிங்கமவ்வளவுக்கு நிறைபலம்அஞ்சதாய்
வங்கமுஞ்சேர்த்து இடித்துதூளாக்கிடு
தங்கமிதற்கொப்போ தாளிதுவுண்மைதான்
பங்கமில்லாவகை பாண்டத்தில்போட்டிடே (௩௪௰)

போட்டபின்சட்டிப் பொருந்தவேமூடிநீ
காட்டதேதமரு கதிர்போலசெய்திடு
வேட்டக்குழிதனில் வெண்கலயமிட்டு
பூட்டுமேல்பாண்டத்தைப் பொருந்தவேமண்ணிடே (௩௪௧)

பொருந்தஎருவை பொடியாயடுக்கி
தெரித்தமட்டந்த திவ்விகலயத்தில்
வருந்தமனோபணி வாழ்க்கையைப்பூசிடு
அறிந்துஅறுதினம் ஐஞ்ஞூறுவருவேற்றே (௩௪௨)

ஏற்றியபின்பு இறங்குந்தயிலந்தான்
தோற்றியசாடியில் துடுக்கென்றடைத்திடு
பாற்றியமென்ன பருட்பொப்பிதாகுமாம்
நேத்திரநோய்கள் புழுவெட்டுவெண்குட்டமே (௩௪௩)

குஷ்டம்பெரும்புண் குலைநோய்ஐயமும்
இஷ்டநரை சிக்கினவர்க்கும்
பக்ஷபாம்பாலனுய் பருவமுமெய்தும்பார்
இஷ்டமாயியம்ப என்னால்முடியுமோ (௩௪௪)

முடியும்வகையை முறைமுறையாகவே
கெடியாயுரைத்தோம் கீர்த்தியுண்டாகுமாம்
பிடியேவகையைதான் பிரபலமாக்கிடும்
நெடியமாமுன்றூறும் நேசித்துப்பாருமே (௩௪௫)

பார்க்கவேயொன்று பகருவோம்கேளு
தீர்க்கமாமென்றால் செப்பிடுமுண்மைதான்
வார்க்கவேஅசுவனி வளமையின்றாகிறு
தார்க்கவேயொன்மொழி தபோபலனெய்துமே (௩௪௬)

கருத்தயிலம்.

எய்தவேயின்னம் இயம்புறேன்கேட்டிடு
கொய்தவேமேனையுங் கெந்தியுஞ்சேர்த்து
மெய்தவேயொன்றாய் மிலாவவேகொய்துநீ
கைதவேகுப்பியில் கடுகஅடைத்திடே (௩௪௭)

அடைத்திடுதிங்க ளானபின்கேளுநீ
படைத்திடும்பாலன் பிறக்குமதுதனில்
அடைத்திடுமேல்குப்பிய தனைடுச்சில்விடு
கடைத்தெழுதலைகீழாய் கட்டிடுபாண்டமே (௩௪௮)

பாண்டயதுதனில் பயிறையுங்கொட்டிடு
வேண்டேநீசலம்விட்டு மேல்சட்டிதான்
கொண்டையில்வாசி குடிபோகமூடிடு
ஆண்டையில்வெட்டியடுப்பதில்வைத்திடே (௩௪௯)

வைத்தபின்சாமம் வகையாயெரித்திடு
சுத்ததில்மூத்துத் தயிலமிறங்கிடும்
கைத்திடுமித்த கருத்தயிலமிதை
பத்திரமாக பரையைத்தொழுதிடே (௩௫௰)

தொழுகஅயச்செம்பு ஒருபங்குவெள்ளிதான்
கழுகவுருக்கிக் காசெடைக்குத்திடு
பழிச்செனவெட்டடை பழுக்குஞ்சத்தியமிது
அழுகவேவேண்டாம் அயச்செம்பைத்தேடிடே (௩௫௧)

வாலுழுவைதயிலம்.

தேடிடுவாலுழுவையுஞ்சீரகம்
காடிடுக்கருசனக் கானகசீரகம்
வாடிடவேண்டாம் வார்த்திடுதயிலம்
பாடிடுந்தேதுப் பாக்களைவெற்றிடே ௩௫௨

எற்றிடவென்றால் இயம்பவுங்கூடா
பாற்றிடபாண்டு பறங்கியின் குஷ்டமும்

நேத்திராகுலை கெடுஞ்சொறிவெட்டையும்
காத்திடமேகங் கரப்பனுங்கிரந்தியே. (௧௫௩)

கிரந்திவகையெல்லாங் கெடுகெட்டோடிடும்
தெரிந்துநாம்சொன்னேனும் திருமூலர்பின்னோர்கள்
வரிந்துகொண்டேதி வையகந்தன்னிலே
பரிந்துமேபண்டிதம் பார்த்திடுமக்களே. (௧௫௪)

பார்த்திடஇந்நூல் பாடினேன்முன்மொழி
தோத்திரமாக தொருப்பையறிந்திடு
சேர்த்திட்டேனிந்நூல் செய்கையினாலேதான்
வாய்த்திட்டமோட்சம் வகையாகஎய்துமே. (௧௫௫)

எய்துமாம்போதம் எளிதோஎளிதல்ல
எய்துமாஞ்சித்தி யெவர்க்குமரிதல்ல
எய்துமாம்வேத சிலாக்கியமொன்றுதான்
எய்துமாமந்த எளிதையியம்பினேம். (௧௫௬)

சேங்கொட்டைதிராவகம்.

இயம்புறேன்கேளு இனியொன்றுமைந்தா
இயம்புறேன்பூத கரப்பனுஞ் ‡ சேங்கொட்டை
இயம்புறேன்காயமூர் வெல்லமுந்திங்கிதான்
நயம்புறேன்தண்ணீர் இரண்டுபடியதே. (௧௫௭)

‡ சேங்கொட்டை சேரான்கொட்டை.

இரண்டதாய்க்கொண்டு இடத்துஉலர்த்திடு
வரண்டபில்வாலை திராவகம்வாங்கிடு
குரண்டையில்சேர கொட்டிபடைத்திடு
திரண்டதுதிராவகம் திவ்வியமாகுமே. (௧௫௮)

ஆகுமாஞ்சங்கிகள் அலைச்சங்கிநீச்சி
வாகுமாம்வையா நீதளசேத்துமம்

# இமிட்டுரத்தினச்சுருக்கம்

தேருமேதொண்டைக் கம்மறும்விம்மல்தான்
ஒருமேயெல்லா மிதனருள்பார்த்திடே. (௩.௫௧)

பார்த்திடுஇன்றால் பழியொன்றுமில்லைதான்
காத்திடுகஞ்சன் கைலையுங்கிட்டும்பார்
வேற்றுமையில்லை வெளிச்சமின்றாவிது
சாற்றிடேனுமுண்மை சத்தியந்தானிதே. (௯.௪௰)

சத்தியமாசுகாம் சாத்தியமுண்டாம்.
சத்தியமென்ன சஞ்சலமற்றிடும்
சத்தியமின்றால் சமிசையில்லைதான்
சத்தியவயித்திய ரத்தினமுற்றே. (௯.௪௧)

இமிட்டுரத்தினச்சுருக்கம்

முற்றிற்று.

௩௩-ம்-பக்கம்-௨௫௨-௨௫௩-வது, செய்யுள்களில்-ரவுத்திரகாளிகி யாமத்திற்சொல்லிய பொருள்மேலோர்க்கன்றி விள்ளாமையாலுரைத்திலம்.

௩௮-ம்-பக்கம்-௰௮-வரி-௨௫௮-வது-செய்யுளில்பாரே அறுகம்ளை-வல்லின மிடையின நெடி லெதுகையும் உயிர்வல்லின குறிலெதுகையும் பிறழ்ந்திருக்கிறது.

௩௮-ம்-பக்கம்-௯௰-வரி-௨௪௰-வது-செய்யுளில் இடி-படி-வடி-ஒரு ஒனே-கடையடியிலிடையின வெதுகை பிறழ்ந்திருக்கிறது-சொல்லும்பொருளு மியைந்திருக்கையான் ஞானிகளோ விறுங்குற்றஞ்சொ[illegible]க்கடவெனை பண்டிதான் மன்னிக்கவும்.

